உ

கணபதிதுணை.

தொட்டிக்கலை

ஸ்ரீ சுப்பிரமணியமுனிவர்

இயற்றிய

# திருத்தணிகைத்திருவிருத்தம்.

இஃது

உத்தமதானபுரம்

வே. சாமிநாதையரால்

பரிசோதிக்கப்பெற்றது.




செந்தமிழ்ப்பிரசுரம்—உசு.

மதுரை:

தமிழ்ச்சங்கமுத்திராசாலையிற்

பதிப்பிக்கப்பெற்றது.

1914.

இதன்விலை அணா 1.

உ

கணபதிதுணை.

# முகவுரை.

இற்றைக்கு ௧௧௫-வருஷங்களுக்கு முன்பிருந்தவரும் திருவாவடுதுறை ஆதீனத்து ஸ்ரீ சிவஞானயோகிகளுடைய அருமைமாணாக்கர்கள் பன்னிருவருள் ஒருவரும் மதுரகவியென்று சிறப்புப் பெயர்பெற்றவரும் இயற்றமிழ்இசைத்தமிழ்நூல்களில் மிக்கபயிற்சியுடையவரும் திருவாவடுதுறைக்கோவைமுதலிய நூல்கள் இயற்றியவரும் முருகக்கடவுளுடைய திருவடிக்கண் மெய்யன்புபூண்டு ஒழுகியவரும் ஷ ஆதீனவித்துவானுமாகிய தொட்டிக்கலை ஸ்ரீசுப்பிரமணியமுனிவரால் இந்நூல் இயற்றப்பெற்றது. மிக்கநோயால்வருந்தித் தம்மைச் சரணடைந்த ஒருவருடைய வேண்டுகோளின்படி, திருத்தணிகை முருகக்கடவுளைத்தியானித்து நாள்தோறும் அவர் பாராயணஞ்செய்து வரும்பொருட்டு இவரால் இயற்றப்பெற்ற தென்பதும் அங்ஙனமே நியமத்துடன் பாராயணஞ் செய்து வந்தமையின், நோய் நீங்கப் பெற்று அவர் இன்புற்று வாழ்ந்திருந்தனரென்பதும் கர்ணபரம்பரைச்செய்திகள். அவர் முதலில் நோயால் வருந்தினமை இந்நூல் ௪-ம் திருவிருத்தம் முதலியவற்றால் நன்குவிளங்கும். முருகக்கடவுளுடைய மெய்யன்பர்களால் இன்றும் அவ்வாறே பாராயணஞ்செய்யப் பெற்று வருகின்றமையாலும் 'செந்தமிழ்' வாயிலாக வெளிப்படுத்தவேண்டுமென்று சில நண்பர்கள் தூண்டினமையாலும் செந்தமிழ்ப்பரமாசாரியராக விளங்கும் ஸ்ரீ முருகக்கடவுளுடைய அருமைத்துதியாகிய இந்நூல் இப்போது வெளிப்படுத்தலாயிற்று.

இந்நூலாசிரியருடைய சரித்திரம் திருவாவடுதுறைக்கோவை அச்சுப்புத்தகத்தால் விளங்கும்.

இங்ஙனம்.

வே. சாமிநாதையன்.

உ

திருச்சிற்றம்பலம்.

# திருத்தணிகைத் திருவிருத்தம்.

ஓங்கார வுருவசின் மயவிமல வொளியாகி
யுலகமுழு வதுநிறைந்த
வுண்மைப் பராபர நிராமய நிராலம்ப
வும்பர்கள் சிகாரத்னமே
யாங்கார நீங்காத தீங்காண வத்தின்வரு
மலகிலாப் பிறவிதோறு
மடியேன்செய் கொடுவினை யளக்கருவ ரம்பினை
யளந்திடினு மளவுபடுமோ
வாங்காம லவ்வினை வருத்தலா லுன்றிருமுன்
வந்தபய மபயமென்றேன்
மயிலேறி வந்துதிரு மந்திர சடாக்கர
மருந்தரு டிருந்துமடியார்
தாங்காண முன்னின்ற சண்முகத் தெய்வமே
சரவணேற் பவகுமரனே
தணிகையங் கிரிவாச வரன்விரும் புபதேச
சகலபண் டிதராசனே. (க)

பன்னரிய வுன்னற்பு தத்திருப் புகழைப்
பகர்ந்துகொண் டுன்றிருமலைப்
படியேறு மன்பர்வினை பொடியாகு மென்றுநிறை
மொழிமாந்தர் பகருவதுகேட்

டென்னுடைய பொல்லாத சஞ்சிதப் பிணியொழித்
தெனையும்வாழ் வித்தருளுகென்
றிரவுபக லுன்னருட் சந்நிதியில் வந்துமுறை
யிடுவேற்கி ரங்கியருள்வாய்
பொன்னிறக் காந்தளொடு செங்குவளை மலர்களும்
பொற்பமர் கடப்பமலரும்
பூத்தலர் குறிஞ்சியுஞ்*சேத்தகூ தளமும்
புனைந்ததிரு மார்பழகனே
தன்னமுழ மனத்துய ரிலாதமர ரைக்காத்த
சரவணோற் பவகுமரனே
தணிகையங் கிரிவாச வரன்விரும் புபதேச
சகலபண் டிதராசனே. (உ)

திருவருள் கொழிக்குமுன் சரவணப் பொய்கைத்
† திருத்தந் திளைத்தாடியே
தீராத பழவினை யழுக்கைக் கழீஇவருந்
திருவாள ரைத்தரிசியா
வுரிமையுட னடியேனு மச்சர வணப்பொய்கை
யுற்றுவந் தாடியுட்கொண்
டுன்னடிக ளேசரண மென்றேல மிடுமெனக்
குறுகுறை தவிர்த்தருளுவாய்
பருவளரு மலபோன் றருக்கினைக் கண்டகர
மலர்கொண்டு தாக்கியவனை
வன்சிறை யிருத்தியுல கேழும் படைத்தநின்
வல்லாண்மை சொல்லவசமோ
தருவளரு மமரா வதிக்கரசை வாழ்வித்த
சரவணோற் பவகுமரனே
தணிகையங் கிரிவாச வரன்விரும் புபதேச
சகலபண் டிதராசனே. (ங)

---

* சேத்த - சிவந்த.

† திருத்தம் - தீர்த்தம்.

கண்டவர் களிக்குமுரு கேசவுன் பெருமையைக்
கடவுட் சுனைக்குள் வளர்செங்
‡ கல்லார முப்போது மலர்தந்து கமழ்தருங்
கந்தமே தூதாயுலா
யெண்டிசையு ளார்க்குந் தெரித்தலாற் கொண்டாடி
யெல்லாரும் வந்துதொழுதுன்
னின்னருளை யொண்டுண்ண விந்நோயின் யானொருவ
னிடருற் றிளைப்பதழகோ
வண்டர்க ணடுக்கமுற வாயிரத் தெட்டண்ட
மாண்டிடு சூரராசூர
னுண்மைதனை நீறாக்கி யவனையிரு கூறாக்கி
யாட்கொண்ட சயசிங்கமே
தண்டையொடு கிண்கிணிகள் கொஞ்சுசெஞ் சரணனே
சரவணோற் பவகுமரனே
தணிகையங் கிரிவாச வரன்விரும் புபதேச
சகலபண் டிதராசனே. (ச)

அத்தான வச்சிங்கன் வெருவச் சிரங்களை
யரிந்தவச் சிரமிருக்க
வக்கிரம மிக்ககிர வுஞ்சமலை பொடியாக்கு
மயில்வேல் வலத்திருக்கச்
சித்தான வுன்னுடைய வாறக் கரங்களாந்
தெய்வமந் திரமிருக்கத்
தீண்டினும் பூசினும் பாபப் பசாசறத்
தீர்க்கும்வெண் ணீறிருக்க

---

‡ கல்லாரம் - கருங்குவளை மலர்; இது, திருத்தணிகைமலையிலுள்ள திருச்சுனையில் காலை, உச்சி, மாலை ஆகிய மூன்று காலங்களிலும் மலர்ந்து வந்தமை, "காலைப் போதினி லொருமலர் கதிர்முதி ருச்சி, வேலைப் போதினி லொருமலர் விண்ணெலா மிருள்சூழ், மாலைப் போதினி லொருமல ராகவிவ் வரைமே, னீலப் போதுமூன் றொழிவின்றி நிற்றலும் மலரும்" என்னும் கந்தபுராணத்திருவிருத்தத்தால் விளங்கும்; வள்ளியம்மை திருமணப் படலம், உஉஉ.

வித்தார ணிக்குளொன் றறியாக் குழந்தைபோ
லென்னளவு நீயிருந்தா
லென்னுகு லத்தைத் துரத்தியெனை யுய்விக்க
வின்னமொரு தெய்வமுண்டோ
சத்தாகி முத்திக்கு வித்தாகி நின்றசிவ
சரவணோற் பவகுமரனே
தணிகையங் கிரிவாச வரன்விரும் புபதேச
சகலபண் டிதராசனே. (ரு)

வெங்கன லுறைப்பவரு பானுகோ பப்பதகன்
விட்டமா யைப்பகழிதான்
மிக்கமயல் பூட்டிக் கருங்கடற் கொண்டுபோய்
வீழ்த்திட வழுந்திநின்ற
துங்கவொளி மணிமகுட பாரநவ வீரரொடு
சோர்வரிய பூதர்களையுஞ்
சுடர்விடுங் குடுமியுடை யடலுடம் பிடிகொண்டு
தூக்கிய பராக்கிரமனே
பங்கமுறு கொடுவினைக் கடலிலே நெடுநாட்
படிந்துசடு மாறுமெனையும்
பயப்படே லென்றுநின் பன்னிரு விழிக்கருணை
பாலித் தெடுத்தருளுவாய்
சங்கடம் விலக்குமொரு தந்திமுக வற்கிளைய
சரவணோற் பவகுமரனே
தணிகையங் கிரிவாச வரன்விரும் புபதேச
சகலபண் டிதராசனே. (சா)

எண்ணிலுயிர் கட்கெலா மன்றுதொட் டகலாம
லென்றுமொரு தஞ்சமாயே
யிருத்தலாற் கந்தனென வொருநாம முற்றனை
யிருண்டமல மோகத்தினாற்
கண்ணிலா ருக்குமெய்க் கோல்கொடுத் தீர்ப்பதுன்
கருணைப் பெருக்கமன்றோ

காங்கேய வுனையன்றி மற்றொருதெய் வத்தைநான்
கனவிலு நினைத்தல்செய்யேன்
மண்ணிலடி யாரிரு வினைக்காடு வேரோடு
மடியவடி வேல்பிடித்து
மாருத பேரின்ப வாழ்வைக் கொடுத்தருள
வாய்மையாங் கொடிகட்டியே
தண்ணருளின் வரமாரி பொழிகின்ற தெய்வமே
சரவணோற் பவகுமரனே
தணிகையங் கிரிவாச வரன்விரும் புபதேச
சகலபண் டிதராசனே. (எ)

அத்தகு சிறப்புடைய க்ருத்திகைத் தையலா
ரறுவர்முலை யமுதவாரி
யருமறை பழுத்தொழுகும் வாயார மொண்டுகொண்
டானந்த மழைபொழிதரும்
வித்தகக் கருணைமா முகிலென்று நம்பியென்
விடாய்தீர வந்தடுத்தேன்
வேறுபுக லில்லையு னடைக்கல மடைக்கலம்
வெட்சிகு டியவிசாகா
சித்திரக் கலபமர கதநிற மயூரனே
தேவகுஞ் சரிமணாளா
சிங்கார வள்ளியிரு சிற்றடிகள் வருடிச்
சிவந்தபன் னிருகரதலா
சத்துருக் கசமுகத் தசுரசங் காரனே
சரவணோற் பவகுமரனே
தணிகையங் கிரிவாச வரன்விரும் புபதேச
சகலபண் டிதராசனே. (அ)

வாலைதிரி புரையான சிவகாம சுந்தரிதன்
மைந்தனே நின்றுவசமா
மதுகையுறு காலாயு தத்தினுக் கேனுநீ
வாகனங் கொடுநடாத்தும்

வேலைநடு வடவையழல் விழிபொழிய வருமொரு
வியன்றகர் தனக்காயினும்
விடைகொடுத் தென்னுடைய போரா வினைக்குன்றை
வேரோ டிடித்தருளுவாய்
கோலமலி தென்பரங் குன்றூ வினன்குடி
குளிர்ந்தசெந் தூரேரகங்
கொடியாடு சோலைமலை குன்றுதோ றுடனுங்
கொண்டருளி நின்றகுகனே
தாலமுழு துண்டபைங் கொண்டன்மே னியன்மருக
சரவணோற் பவகுமரனே
தணிகையங் கிரிவாச வரன்விரும் புபதேச
சகலபண் டிதராசனே. (௯)

நலமருவு மதுரைத் தமிழ்ச்சங்க மேற்புலவர்
நடுவீற் றிருந்தமுதல்வா
நக்கீரர் சொன்னமுரு காற்றுப் படைத்தமிழு
நல்லருண கிரிநாதர்சொற்
புலமையுறு சித்திரச் சந்தப்ரவாகமும்
புனிதச் செவிக்குளார்த்த
புகழாள குறுமுனிக் காரணத் துட்பொருள்
புலப்படுத் தியகுரவனே
கொலைகளவு முதலான பாதக மெனக்குவெகு
கோடிகளிருந்திடினுமுன்
கூர்மந் திரப்படையி னல்வீட்டி யெனதுளங்
குடிகொண் டிருந்தருளுவாய்
சலனமறு சருவபரி பூரண தயாநிதே
சரவணோற் பவகுமரனே
தணிகையங் கிரிவாச வரன்விரும் புபதேச
சகலபண் டிதராசனே. (௧௦)

முற்றிற்று.